

# அண்ணல் காந்தியின் அமுத மொழிகள்








தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, மதுரை-13

# அண்ணல் காந்தியின் அமுத மொழிகள்

தமிழாக்கம்
சொ. சண்முகம்

தமிழ்நாடு காந்தி நினைவு நிதி
மதுரை-13

# அண்ணல் காந்தியின் அமுத மொழிகள்

அண்ணலின் நூற்ருண்டு விழாவினை அண்மையில் தான் கொண்டாடினேம். அவரது நினைவைப்போற்றுதற்குச் சிறந்த வழி அவர் தம் கருத்துக்களையும் அரிய சிந்தனைகளையும் நாள்தோறும் சிந்தித்துச் செயல்பட முனைவதேயாகும். எனவே நாளைக்கு ஒன்று வீதம் ஓராண்டுக்கு வேண்டிய அரிய பொன்மொழிகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்திருக்கிருேம். இவற்றின் ஆதாரமும் கொடுக்கப்பட்டிருப்பது இந்தப் புத்தகத்தின் தனிச்சிறப்பாகும்.

வள்ளுவம், நாலடி, நீதிநெறி போன்றவற்றின் கருத்துக்களைக் காந்தியடிகளின் பொன்மொழிகள் நினைவூட்டும். எனவே தமிழ்ப் பெருமக்களுக்கு அண்ணலின் அமுத மொழிகள் பழகியவை போலத் தோன்றும்.

இவற்றைத் தமிழில் ஆக்கித் தந்த நெல்லை திரு. சொ. சண்முகம் அவர்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

இச்சிறு வெளியீட்டினைத் தமிழ் மக்கள் அனைவரும் வாங்கிப் படித்துப்பயன்பெறுவார்கள் என்று நம்புகிருேம்.

ம. மு. விசுவநாதன்

மதுரை - 13 செயலாளர்

25-8-1970. தமிழ்நாடு காந்தி நினைவு நிதி

பொருளடக்கம்

# அஹிம்சை - அன்பின் வலிமை

1 சகிப்பற்ற தன்மை ஒருவித பலாத்காரம் ஆகும். ஆகவே, அது நமது கொள்கைக்கு எதிரானது.

w. w. g - 18

2 அஹிம்சையின் அகராதியில் தோல்விக்கு இடமே இல்லை.

m. g. s. - 21

3 வெறுப்பின் முடிவு ஒருபோதும் நீதியாக இராது. அது பழிக்குப் பழி வாங்குவதே ஆகும் - குருட்டுத்தனமான வெறியும் கூட.

w. w. g. - 103

4 நற்காரியங்களைக் கூட வன்முறையாய்ச் செய்வதை முழு மூச்சுடன் எதிர்ப்பவன் நான்.

w. w. g. - 89

5 சத்தியாக்கிரகி சோர்வையே நினைத்துக்கொண்டிருக்கக்கூடாது. அப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஏற்பட்டால், அதற்குத் தன்னைத் தயாராக்கிக் கொள்வான். எதிரிகளின் செயல்களுக்குத் தவறான எண்ணம் கற்பிக்கமாட்டான்.

w. w. g. - 105

6 தியாக வாழ்க்கையைத் தெரிந்தெடுத்துக் கொண்டவர்கள், தாங்கள் உயர்வதுடன் மனித குலம் முழுவதையும் உயர்த்துகிறார்கள்.

w. w. g .- 91

7 அஹிம்சா வாதி பயப்படுவது, கடவுளுக்கு மட்டுமே.

w. w. g. - 103

8 அன்பையும் சகிப்புத்தன்மையையும், ஆண்களை விடப் பெண்களிடத்திலிருந்து அதிகம் எதிர் பார்க்கிறேன்.

m. m. g. - 296

9 வாழ்வையும் சாவையும் சத்தியாக்கிரகம் கலை யாக நமக்குப் போதிக்கிறது.

m. m. g .-168

10 அதிகம் கொடுப்பவர்களிடமிருந்து, மேலும் மேலும் எதிர்பார்க்கப்படுகிறது.

w. w. g. - 80

11 வாழ், வாழ விடு; ஏனென்றால், ஒருவர்க் கொருவர் விட்டுக் கொடுத்தலும் சகிப்புத் தன்மையும்தான், வாழ்க்கையின் நியதி.

d. b. t. - 70

12 பரஸ்பர சகிப்புத்தன்மைதான் அஹிம்சை.

m. m. g. - 128

13 அன்பற்ற வாழ்க்கை சாவுக்கு ஒப்பாகும்.

g. t. g. - 166

14 தைரியம் ஆணின் ஏகபோகமல்ல; ஆணைப் போல் தனக்கும் சுதந்திரம் உண்டு என்பதைப் பெண்ணும் உணர வேண்டும்.

m. m. g. - 297

15 அஹிம்சை மாபெரும் நல்லொழுக்கம். கோழைத்தனம் மாபெரும் கேடு.

m. g. s. - 11

16 பகைமை, பகைக்கிறவனின் உள்ளத்தைப் புண் படுத்துகிறதே அன்றி, பகைக்கப்படுகிறவனை அல்ல.

w. w. g. - 105

17 சத்தியத்துடன் அஹிம்சை இணைந்து விட்டால், உலகை அடிபணிய வைக்கலாம்.

m. m. g. - 167

18 சத்தியத்தை நாடுகிறவன் அன்பின் வழி முறையில் நிற்பவன் நாளைக்கென எதையும் சேமித்து வைக்கமாட்டான்.

g. t. g. - 168

19 அஹிம்சையைக் கடைப்பிடிக்கும் சத்தியாக்கிரகி அதை மனம் வாக்குக் காயத்தால் கடைப்பிடித்து ஒழுகுவான்.

m. m. g. - 172

20 அன்பு ஒருபோதும் தனக்கென எதையும் விரும்புவது கிடையாது; விரும்புவதாயின் பிறருக்காகத்தான்.

p. p. - 141

21 அஹிம்சையே சுவர்க்கம்.

m m. g. - 125

22 இவ்வுலகில் நாம் இயல்பான சாந்தியைப் பெற விரும்பினால், குழந்தைப் பருவத்திலேயே அதற்கான செயலைத் தொடங்கவேண்டும்.

g. t. g. - 47

23 வாழ்க்கையின் நியதி அஹிம்சை என்றால், எதிர்காலம் பெண் இனத்தைச் சார்ந்தது.

g. t. g. - 163

24 மிருக இனத்தினுடைய வழிமுறை மூர்க்கத்தனம்; மனிதனுடையதோ அஹிம்சை.

m. m. - 291

25 அஹிம்சை மாற்ற முடியாததொரு கொள்கை

m. m. g. - 114

26 அக்கிரமத்திற்கு எதிரான நேர்மைப் போராட்டத்தில் வெற்றிபெற ஒரே ஒரு பரிபூரண தூய எதிர்ப்பாளி போதும்.

m. m. g. - 165

27 அஹிம்சை ஒற்றுமைப்படுத்தும் சக்தி; பல்வேறான வேற்றுமையிலும் ஒற்றுமையைக் கண்டு பிடிக்கும்.

d. b. t. - 54

28 பலாத்காரத்திற்குப் பணிந்தாலும் சரி, எதிர் பலாத்காரம் காட்டினாலும் சரி, ஹிம்சை தான் வளர்ச்சியுறும்.

w. w. g. - 104

29 சத்தியமும் அஹிம்சையும் குறிப்பிட்ட நபர்களுக்காக ஏற்பட்டதல்ல, அதேபோன்று தன்னடக்க

மும் சிலருக்காக மட்டும் அல்லாது, மனித சமுதாயம் முழுமைக்குமே அவசியமாகும்.

m. m. g. - 290

30 சத்தியாக்கிரகம் பேராற்றல் படைத்தது ஏனென்றால், அது பூரண ஆன்ம சக்தியிலிருந்து வெளிக்கிளம்பியது.

m. m. g. - 174

31 மரணம் எப்போதுமே வரவேற்கத்தக்கது, அதிலும் சிறந்த லட்சியத்திற்காக அதாவது உண்மைக்காகச் சாகின்ற போர் வீரனின் மரணம் இருமடங்கு மதிப்பிற்கு உரியது.

d. b. t. - 14

32 பகைமையால் எப்போதும் அழிவு தான், அன்பு ஒருபோதும் மடிவதில்லை.

g. t. g. - 169

33 முறை சரியாக இருந்தால், முடிவும் சரியாகத் தான் இருக்கும்.

d. b. t. - 14

34 நட்பைப் பெறுவதற்கான நியதி நீதியல்ல; இணக்கம் தான்—அதிலும் முழுமையான சரண் புகுதல் ஒன்று மட்டுமே.

g. t. g. - 112

35 பலாத்காரத்தால் நிலையான எதையும் ஆக்க முடியாது என்பதே எனது திட நம்பிக்கை.

m. m. g. - 254

36 பிறரைக் கொல்லும் செயலில் ஈடுபட்டு மடிகின்ற கோடிக்கணக்கான மக்களின் தியாகத்தை விட,

தூய மனிதன் ஒருவனின் தியாகம் எத்தனையோ மடங்கு சக்தி வாய்ந்தது.

m. m. g. - 139

37 உண்மைத் தியாகத்திற்கு சங்கடம் தெரியாது; அது பொருட்படுத்தவும் செய்யாது. மகிழ்ச்சியே – அதுவும் ஒப்பற்ற மகிழ்ச்சியே ஏற்படும்.

m. m. g. - 170

38 அஹிம்சா மார்க்கமே ஒருவனைத் தூய்மையான மக்களாட்சிக்கு அழைத்துச் செல்லும்.

m. m. g. - 131

39 ஒழுங்கு முறையின் சாரம் அஹிம்சை.

m. m. g. - 223

40 எதிரியால் தாக்கப்படுகின்ற பொழுதெல்லாம் அவனை அன்பினால் வென்று விடு.

w. w. g.

41 அன்பு வாழ்வின் நியதியாக இல்லாதிருந்தால், சாவின் மத்தியில் வாழ்வு தொடர்ந்திருக்க இயலாது.

h. - 1936

42 சத்தியாக்கிரகிக்குக் கால வரையறை கிடையாது; எனவே, தோல்வியும் இல்லை.

w. w. g. - 105

43 அஹிம்சா முறை சுணக்கமான நீடித்த ஓர் உபாயம் என்ற அச்சம் தேவையில்லை. உலகம்

கண்டறிந்த உபாயங்களில் அதுவே வெற்றி தருவதில் விரைவானதும் நிச்சயமானதும் கூட.

w. w. g. - 105

44 வலிமை உடல் பலத்தால் அல்ல; மன உறுதியிலிருந்தே உண்டாவது.

g. t. g. - 265

45 வீரனுக்குப் போராடுவதே வெற்றிதான். ஏனென்றால் அதில்தான் மகிழ்ச்சி அடைகிறான்.

m. g. s. - 21

46 மனத்தில் பகைமையை அடக்கி வைத்திருப்பது, நேரடிப்போரை விடக் கொடியது.

m. m. g. - 328

47 எல்லோரும் ஒரே மாதிரி நினைப்பதில்லை; அத்துடன் உண்மையின் ஒரு பகுதியைத்தான் அறிகிறோம், அதுவும் பல கோணங்களிலிருந்து. ஆகையால், சகிப்புத்தன்மைதான் தங்கமான நல்விதி.

w. w. g. - 18

48 சத்தியாக்கிரகம் என்பது உண்மையை விடாப்பிடியாகத் தேடுவதும், அதை அடைந்தேதீர வேண்டும் என்ற உறுதியும் தான்.

m. m. g. - 167

49 நாம் அஹிம்சா வாதியாக இருக்க விரும்பினால், இவ்வுலகில் தாழ்ந்த எளிய நிலையிலுள்ள மனிதர்கள் அடைய முடியாத எதையும் பெற ஆசைப்படக்கூடாது.

m. g. s. – 15

50 கொள்கைக்காக உயிரையே தியாகம் செய்யத் தயாராக இருந்தால், செல்வம் ஒரு பொருட்டல்ல.

w. w. g. - 86

51 அஹிம்சா யுத்தம் எப்போதும் ஓர் உடன்பாட்டில்தான் முடியும்; எதிரிக்கு அவமான நிலையும் ஏற்படாது.

w. w. g. - 108

52 சத்தியாக்கிரகத்தின் அழகு, அது ஒருவனைத் தானாகவே தேடி வருவது. அதைத் தேடிப் போகவேண்டியதில்லை.

w. w. g. - 106

53 "அமைதியான எதிர்ப்பு" என்பதை ஆங்கிலத்தில் உண்மைச் சக்தி என்று கொள்ளலாம். டால்ஸ்டாய் அதை ஆன்ம சக்தி அல்லது அன்பின் ஆற்றல் என்று கொண்டார்.

w. w. g. - 88

54 அஹிம்சா வழி முறையால் அதிகாரத்தைக் கைப்பற்ற முடியாது; கைப்பற்றுவதும் அதன் லட்சியம் அல்ல; ஆனால், அதிகாரத்தைக் கட்டுப்படுத்திச் சிறந்த முறையில் செயல்பட அது வழி காட்டுகிறது.

m. m, g. - 132

55 அஹிம்சை ரேடியம் போன்று அமைதியாகவும் நுண்ணிய சூக்குமமாகவும் செயல்பட்டு சமுதாயம் முழுவதையும் சீர்படுத்துகிறது.

h. - 1938

56 விரத்துடன் உண்மையான கஷ்டத்தைத் தாங்கி சகித்துச் கொள்வது, கல் நெஞ்சத்தையும் கூடக் கனிவித்துவிடுகிறது.

w. w. g .- 91

57 அக்கம் பக்கத்தாரிடம் அன்பு இல்லையேல் எவ்வித புரட்சிகரமான மாறுதலானாலும் நன்மை பயக்காது.

w. w. g. - 69

58 உலக சக்திகள் அனைத்திலும் மிக வல்லுவுள்ளது அன்பு ஒன்றுதான்; எனினும், அதுதான் மற்றெல்லாவற்றையும் விட எளிதானதும் கூட.

w. w. g - 69

59 ஒரு போராட்டத்தில், தொடர்புள்ள ஒவ்வொரு சிறுசிறு வேலைப் பிரிவும், மற்றப் பிரிவுகளைப் போன்றே முக்கியத்துவம் வாய்ந்தது.

w. w. g.-105

60 ஒரு பலவீனமான மனிதன் நியாயமாக இருத்தல், ஏதோ எதிர்பாராது நடக்கும் சம்பவம்; அதே போல் அஹிம்சாவாதி நீதியற்ற முறையில் நடப்பதும் எதிர்பாராத சம்பவமே.

d. b. t.-6

61 கோபமும் சகிப்பின்மையும் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது செய்யும் இரு விரோதிகள்-

g.. t. g. - 22

62 தற்காப்புக்காகக் கொலை செய்யக்கூடிய வலிமை தேவையில்லை. தான் சாவதற்குத் தான் வலிமை வேண்டும்.

m. g. s. - 13

63 அஹிம்சையானது மிகமிக உயர்ந்த ஒரு உத்வேகமுள்ள சக்தியாகும்.

m. m. g. - 115

64 வலியவர்கள் எளியவர்களிடமிருந்து பறிக்கிறார்கள். அதே சமயம் பலவீனமுள்ளவர்களாக இருப்பது பாவம் என்பதையும் ஒப்புக் கொள்கிறேன்.

m. m. g. - 121

65 அஹிம்சை வழியைக் கடைப்பிடிக்க, பலாத்கார வழியைப் பின்பற்றுவதற்கான தைரியத்தைக் காட்டிலும் அதிக தைரியம் தேவை.

m. m. g. - 119

66 கோபம் அஹிம்சையின் பகைவன்; கர்வம் அதை விழுங்கும் பூதம்.

g. g. - 7

67 எந்தச் சக்தி அதிக வலிமை உள்ளதாக இருக்கிறதோ அது அதிக அமைதியும் நுட்பமுள்ளதாகவும் இருக்கிறது; அப்படிப்பட்டவற்றில் அன்புதான் தலை சிறந்தது.

g. t. g. - 170

68 பலவீனமானவர்களுக்குப் பரிவு காட்டுதல் அஹிம்சையின் ஓர் அங்கம்; பரிவில்லாத அஹிம்சை முடம்.

g. g. - 32

69 அஹிம்சையும் உண்மையும் கொண்ட வாழ்வுப் பாதை கூர்மையான கத்தி முனைமேல் நடப்பது போன்றது.

d. b. t. - 9

70 ஒழுக்கம் தவிர்ந்ததும் அன்பு நஞ்சாக மாறி விடும்.

g. t. g. - 170

71 அஹிம்சை மன்னிப்பின் எல்லைக்கோடு; அச்ச மின்மையின் அடிப்படையில்தான் அது வளர முடியும்.

p. p. - 4

72 அஹிம்சை பணிவின் எல்லைக் கோடு.

d. b. t. - 55

73 சத்தியாக்கிரகம் என்பது தேசிய வாழ்வில் சத்தி யத்தையும் பணிவுமிக்க உயர்குடிப் பண்பையும் புகுத்துவதாகும்.

y. i -1920

74 அஹிம்சை முறை நம்மீது எதிரிகள் கொண் டுள்ள விரோத மனப்பான்மையைச் சாந்தப்படுத் தும்; பகைமையை வளர விடாது.

m. m. g - 124

75 கடவுள் அஹிம்சாவாதியின் கேடயம்.

m. m. g. - 120

76 தர்மத்தைப் போல் அஹிம்சையும் நம் வீட்டி லிருந்தே ஆரம்பமாக வேண்டும்.

d. b. t. - 105

77 கோழை தன்னுடன் பலர் சேர வேண்டுமென விரும்புவான், வீரனே தனித்துப் போராடவே ஆசைப்படுவான். g. t. g. - 265

78 நம்பிக்கை ஒரு நல்ல பண்பு; பயங்கொள்ளித் தனம்தான் அவநம்பிக்கையைத் தருவது.

g. t. g. - 277

79 வீரம் உடலின் தன்மையல்ல; அது ஆன்மாவின் தன்மை.

m. m. - g. 61

80 அஹிம்சை சந்தர்ப்பச் செயல் முறை அல்ல; அது கோட்பாடு – மதம்.

d. b. t. - 27

81 மனித சமுதாயத்தின் நலனுக்காக ஓயாது உழைப்பதுதான் உயர்ந்த ஒழுக்கம்.

g. t. g. - 186

82 உயிர்த்தானம் எல்லாத் தானங்களிலும் சிறந்தது; அதை உண்மையுடன் கொடுப்பவன் எல்லா விரோதத்தையும் வென்று விடுகிறான்.

d. b. t. 155

83 மனோசக்தியை வளர்த்தால், நமக்கு ஆயுத பலம் தேவையில்லை.

g. t. g. - 299

84 ஆன்மீக வளர்ச்சிக்கு முதல் தேவை அச்சமின்மை; கோழைகள் ஒரு போதும் ஒழுக்கம் உள்ளவர்களாக இருக்க முடியாது.

y. i. - 1921

85 மனித வர்க்கம் கையாளக் கூடிய மாபெரும் சக்தி அஹிம்சை.

h - 1935

86 அஹிம்சை கட்டுப்பாட்டின் சாரம்.

m. m. g. - 223

## 2 சமயம் - காந்தியடிகளின் கருத்து

1 சத்தியமும் அஹிம்சையும் எனது கடவுள்.

g. t. g. - 123

2 தன்னடக்கமற்ற சேவை, தன்னலமும் தற்புகழ்ச்சியும் ஆகும்.

d. b. t. - 2

3 சத்தியமும் அன்பும்தான் எனக்குக் கடவுள். கடவுளே நீதியும் நல்லொழுக்கமும் அச்சமற்ற தன்மையும் ஆவார். ஒளி விளக்கத்திற்கும் வாழ்விற்கும் கடவுளே தோற்றுவாய். அப்படி இருப்பினும் அவற்றிற் கெல்லாம் அப்பாற் பட்டவர். கடவுளே மனச்சாட்சி. நாஸ்திக வாதியின் நாஸ்திகவாதமும் அவரே, ஏனெனில், எல்லையற்ற கருணையினுல் நாத்திகனையும் அவர் வாழ விடுகிருர்.

y. i. - 1925

4 உண்மையை நாடுபவன் துரும்பைவிடப் பணி வுள்ளவனுக இருக்கவேண்டும். உலகம் தூசி யைத் தனது காலடியில் மிதிக்கிறது. அந்தத் தூசியும் தன்னை மிதித்துத் துவைக்கும் அளவிற் குப் பணிவுள்ளவனுக இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் சத்தியத்தின் சாயலை நாம் காணமுடியும்.

m. m. g. - 43

5 சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் சத்தியத்தை மேற்கொள்வது. நேர்மைப் பாதையின் முதற்கட்டம்.

g. t. g. - 279

6 தனது தகாத குணங்களையும் பலவீனத்தையும் ஒப்புக்கொள்வதே, பிரார்த்தனை எனப்படும்.

g. t. g. - 205

7 எதைச் செய்தாலும் உனக்கும் உலகிற்கும் உண்மையாக இரு.

h. - !937

8 பிரார்த்தனையுடன் தொடங்கும் முயற்சி ஒரு போதும் வீண் போகாது. அம்முயற்சிதான் மனிதனின் வெற்றி. பலன் கடவுளின் கைகளில் இருக்கிறது.

y. i. - 1931

9 வாயில்லாப் பூச்சிகளான கோடிக்கணக்கான மக்களின் இதயங்களில் குடி கொண்டிருக்கிற கடவுளைத் தவிர வேறு கடவுள் எனக்குத் தெரியாது.

h. - 2939

10 வெளியிலுள்ள நீதிபதியைவிட, உள்ளத்து நீதிபதி அச்சுறுத்துவது மிகப் பயங்கரமானது.

d. b. t. - 31

11 வேத நூல்கள் அனைத்தும் ஆதரவு கொடுத்த போதிலும், தவறுக்கு விதி விலக்கு இல்லை.

g. t. g. - 95

12 பிரார்த்தனை பணிவுடைமைக்கு ஓர் அழைப்பு; தன்னையே தூய்மைப் படுத்திக் கொள்ளவும், ஆத்ம சோதனைக்காகவும் விடுக்கும் கோரிக்கை.

d. b. t. - 93

13 பொய்யும் பலாத்காரமும் இரட்டைச் சகோதரிகள்.

d. b. t. - 101

14 வெளிச்சம் இருந்தால் நிழல் இருப்பது போல, மதங்களை ஒட்டி வேஷங்கள்.

w. w, g. - 15

15 ஒரு மதத்தை அதன் மோசமான அம்சங்களைக் கொண்டு நிர்ணயம் செய்யக் கூடாது. மிக உயர்ந்த அம்சங்களை வைத்து மதிப்பிட்டால் அதுவே குறிக்கோளாக்கிக் கொள்வதற்கு உபயோகமாகும்.

w. w. g - 16

16 சமயம் ஆன்மாவைப்பற்றிய விஞ்ஞானமாகும்.

w. w. g. - 17

17 ஒருவன் தனது குற்றத்தை ஒப்புக்கொள்வது, குப்பையைப் பெருக்கித்தள்ளி முன்னைவிட இடத்தைச் சுத்தப்படுத்துகின்ற துடைப்பம் போன்றது.

w. w. g. - 36

18 ஒளிவு மறைவின்றிக் குற்றத்தை ஒப்புக் கொள்வதோடு, அதை மறுபடியும் செய்வதில்லை என்று தகுந்தவரிடம் வாக்குறுதி கொடுப்பது மிக உயர்ந்த முறையாகும்.

w. w. g. - 36

19 இதயத்தை ஊடுருவிச் செல்லாமல், மூளையின் மட்டத்தில் நின்று விடுகிற அறிவு, வாழ்க்கையின் நெருக்கடியான நேரங்களில் பயன்படாது.

w. w. g. -42

20 கடவுளுக்குப் பயப்படுவோம்; மனிதன்பால் அச்சம் கொள்வது நின்றுவிடும்.

s. & w. - 330

21 கொடுப்பதில்தான் மகிழ்ச்சி; பெறுவதில் அல்ல.

d. b. t. - 3

22 ஏழைகளுக்காக உழைப்பதை விடக் கடவுளைத் தொழுகின்ற மார்க்கம் வேறெதுவும் இல்லை.

d b. t. - 4

23 உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாடுகளை மறந்து, மக்கள் அனைவரும் சமம் என்று உணர்வதை விட, மேலான தியாகம் எதுவும் இன்றைக்கு இல்லை.

g. t. g. - 238

24 பிரார்த்தனை காலைத் திறவுகோல், மாலைத் தாழ்ப்பாள்.

y. i. - 1930

25 தியாகத்திற்குத் தயாராக இருப்பவனே ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்ய முடியும் என்று எனது சமயம் கூறுகிறது.

g. t. g. - 106

26 இலட்சியங்கள் நடைமுறையில் காரிய சாத்திய மானவையாக இருக்கவேண்டும். இல்லையேல், அவை ஆற்றல் அற்றுப்போம்.

g, t. g. - 141

27 இந்து தர்மம் விலை மதிக்கமுடியாத மாணிக்கங்களைத் தன்னகத்தே தாங்கி நிற்கின்ற எல்லையற்ற சமுத்திரம் போன்றது.

g. t. g. - 134

28 சரியான வழிபாடு உருவ வழிபாடல்ல; அது உருவத்தில் கடவுளை வழிபடுவதாகும்.

g. t. g. - 143

29 தேவைகளைப் பெருக்கிக் கொள்வதல்ல, அவற்றைக் குறைத்துக் கொள்வதே உண்மை நாகரிகம்.

m. m. g. - 189

30 தியாகமே வாழ்க்கையாகும்; புலனுகர்வே மரணம்.

m. m g. - 192

31 மனிதர் சத்தியத்தில் அழகைக் காணத் தொடங்கும் பொழுதெல்லாம், உண்மையான கலை உதயமாகும்.

m. m. g. - 57

32 வழிபாட்டில் நெஞ்சம் ஈடுபடாத வெறும் சொற்களை விட, சொற்கள் இல்லாத பரிவுள்ள இதயம் சிறந்தது.

d. b. t. - 146

33 கடவுளும் சத்தியமும் ஒன்றே.

g, g. - 244

34 மதச்சார்பற்ற அற வாழ்வு மணல் மீது எழுப்பப் பெற்ற வீடு.

w. w. g. - 49

35 நம்பிக்கை இல்லாதவன் கடலிலிருந்து சிதறிய நீர்த்துளி போன்று அழிந்து விடுவான்.

g.. t. g. - 99

36 பயனுள்ளது எதுவும் அழகாகவே இருக்கும்.

m. m. g. - 58

37 நல்லது கெட்டது ஆகியவற்றைப் பற்றிக் கடவுள் துல்லியமான கணக்கு வைத்திருக்கிறார். அவரை விடச் சிறந்த கணக்கன் இவ்வுலகில் இல்லை.

w. w. g. - 28

38 மேக மண்டலத்திலேயே வசிக்கின்ற ஒரு சக்தியல்ல; நமக்குப் புலப்படாமல் நமக்குள்ளேயே மிக மிக நெருங்கி இருக்கும் சக்தியே கடவுள்.

w. w. g .- 29

39 வாழ்க்கை நியதியைக் குறிப்பிடுகின்ற கடவுளை எந்தப் பெயராலும் அழைக்கலாம்.

w. w. g. - 29

40 தேடிக் கண்டு பிடிக்க வேண்டிய முதற் பொருள் சத்தியம்; அழகும் நற்தன்மையும் தாமாகவே வந்தடையும்.

g. t. g. - 279

41 தன் சொந்த மதத்தை நன்றாகத் தெரிந்துகொள்வதற்கு முன், வேறொரு மதத்தைத் தழுவ நினைக்கக்கூடாது.

w. w. g. - 20

42 சமய நூல்கள் பகுத்தறிவுக்கும் சத்தியத்திற்கும் மேம்பட்டவை அல்ல. அறிவைச் சுத்தப்படுத்தவும் சத்தியத்திற்கு ஒளி காட்டவும் அவை ஏற்பட்டுள்ளன.

w. w. g. - 20

43 இந்து சமயம் என்பது ஒரு மதமல்ல; அது வாழும் வழி.

w. w. g. - 20

44 ஒழுக்கம் எல்லாவற்றிற்கும் அடிப்படை; சத்தியமே ஒழுக்கத்தின் சாராம்சமாகும்.

g. t. g. - 185

45 சத்தியமே கடவுள் என்ற என் கருத்து எனக்கு மதிப்பிட முடியாத சொத்து. ஒவ்வொருவருக்கும் அவர் அவ்வாறே இருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்,

d. b. t. - 199

46 கடமையைச் செய்வதிலிருந்து தான் உரிமைகள் எழுகின்றன.

g. t. g. - 238

47 உண்மைதான் நிலைத்து நிற்கும்; மற்றெல்லாம் கால வெள்ளத்தில் அழிந்து விடும்.

m. m. g. - 47

48 அஹிம்சைதான் பரமபிதாவின் சாம்ராஜ்யம்.

m. m. g - 125

49 குறிக்கோளை அடையும் முயற்சியில்தான் பெருமை இருக்கிறதே ஒழிய, அதை அடைவதில் அல்ல.

d. b. t. - 36

50 பிரார்த்தனையுடனும் நல்லெண்ணத்துடனும் ஆரம்பிக்கப்பட்ட முயற்சி வீண் போகாது. மனிதனின் வெற்றி முயற்சியில் தானிருக்கிறது. பலனோ இறைவன் கையில் இருக்கிறது.

g. t. g. - 19

51 சத்தியமும் அன்பும் தான் எனது கடவுள்.

y. i. - 1925

52 பிரார்த்தனை இரப்பதல்ல, அது ஆன்மாவின் வேட்கை.

p. p. - 182

53 உனது எண்ணங்களை மறைக்காதே; அவற்றைச் சொல்வது வெட்கம் என நீ எண்ணினால், நினைத்தது அதை விட வெட்கம் அல்லவா?

d. b. t. - 52

54 குறிக்கோளை அடையும் முயற்சியில்தான் மன நிறைவு இருக்கிறது; அடைவதில் இல்லை. முழு முயற்சி முழு வெற்றி.

d. b. t. - 55

55 எல்லாக் கலைகளையும் விட வாழ்க்கை உயர்ந்தது. எந்த மனிதனின் வாழ்க்கை பூரணத்துவம் அடைகிறதோ, அவன் தான் மிகச்சிறந்த கலைஞன் என்றுதான் கூறுவேன்.

l. & g. - 120

56 பலாத்காரத்தின் மீது நிலையான எதையும் கட்ட முடியாது, என்பது எனது உறுதியான நம்பிக்கை.

g. t. g. - 291

57 கோடிக்கணக்கான மக்களுக்குப் பயன் தரும் கலையும், இலக்கியமுமே நான் விரும்புவது.

m. m. g. - 56

58 தூய்மையான உள்ளத்தில் தான் உண்மையான அழகு குடி கொண்டிருக்கும்.

g. t. g. - 23

59 நல்ல காரியத்தில் ஈடுபட்டிருக்கும் பொழுது, ஆட்களைப் பற்றிய விவாதம் வேண்டாம்.

d. b. t. - 5

60 எங்கே ஏழைகளுக்காக ஊக்கத்துடன் நற் செயலாற்றும் அன்பு இருக்கிறதோ, அங்கே கடவுள் இருக்கிறார்.

m. m. g. - 403

61 நட்சத்திரங்களுக்கெல்லாம் தலையாய நட்சத்திர மாகிய கடவுளிடம் ஒரு முறை மனம் ஈடுபட்டால், அது தூய்மையாகி விடுகிறது.

m. m. g. - 417

62 உண்மையான தியாகம் தன்னை அறிவதில்லை; கணக்கு பார்ப்பதும் இல்லை. அது மகிழ்ச்சியைத் தருகிறது. அந்த மகிழ்ச்சி மற்றெல்லா மகிழ்ச்சி யையும் தாண்டி விடுகிறது.

m. m. g. - 170

63 கடவுளால் ஒற்றுமைப்படுத்தப்பட்டவர்களை மனிதனுல் ஒருபோதும் பிரிக்க முடியாது.

d. b. t. - 8

64 வருங்காலத்தைப் பற்றி அறிய நான் ஒருபோதும் விரும்புவதில்லை. நிகழ்காலம் மனநிறைவுள்ளதாக இருப்பின், எதிர்காலம் வேறுவிதமாக இருக்க முடியாது.

m. m. g. - 326

65 உண்மையான நல்லொழுக்கம் பண்டைய வழக்கத்தைப் பின்பற்றுவதல்ல. நாமாகவே உண்மை வழியைக் கண்டு பிடித்து அச்சமின்றி, அதைப் பின்பற்றுவதே ஆகும்.

m. g. s. - 9

66 மதங்கள் மனிதர்களைப் பிரிப்பதற்காக அல்ல; அவை மனிதரை ஒற்றுமைப் படுத்தவே ஏற்பட்டுள்ளன.

d b. t. - 156

67 இன்று நடக்கவேண்டியதை நீ கவனித்துக் கொண்டால், நாளைய காரியத்தைக் கடவுள் கவனித்துக் கொள்வார்.

d. b. t. - 21

68 கடவுள் அஹிம்சாவாதிகளின் கேடயம்.

m. m. gr - 126

69 மதம் இல்லாத அரசியல் மரணப்பொறி. ஏனென்ருல் அது ஆன்மாவை அழித்துவிடும்.

d. b. t. - 29

70 இவ்வுலகில் நான் ஏற்றுக்கொள்ளும் 'கொடுங் கோலன்', உள்ளே இருக்கும் அமைதியுள்ள குரலான மனச்சாட்சிதான்.

g. t g. - 56

71 உண்மை தானே தெரியக்கூடியது; அறியாமை என்ற மாசைத் துடைத்து விட்டால், தெளி வுடன் பிரகாசிக்கும்.

w. w. g. - 70

72 மண்ணில் இடப்படும் விதைக்குத் தண்ணீர் இன்யமையாததைப் போல், மதம் ஒழுக்கத் திற்கு அவசியமாகிறது. உண்மை மதமும் ஒழுக்கமும் ஒன்றே.

m. g. s. -

73 ஒருவன் மற்றவனை விட உயர்ந்தவன் என்று கொள்வது, கடவுளுக்கும் மனிதனுக்கும் செய்யக் கூடிய துரோகமாகும்.

g. t. g. - 41

74 கோட்பாட்டின் படி நடந்தால் அது நல்லது தான்; அப்படி நடத்தையில் காட்டாத கோட்பாடு பயனற்றது.

d. b. t. - 10

75 ஒழுக்கத்தின் சிறந்த விதி பரஸ்பரம் சகிப்புத் தன்மை.

y. i. - 1926

76 எனது கோட்பாட்டின் முதல் விதி அஹிம்சை; கடைசி விதியும் அதுவேதான்.

p. p. - 166

77 சிந்தனை சொல் செயல் இம்மூன்றிலும் கொள்ளும் புலனடக்கம் தான் பிரம்மச்சர்யம்.

g. t. g. - 33

78 தான் செலுத்தும் பக்திக்கு கனவிலும் கைம்மாறு கருதாதவன் தான் சிறந்த கடவுள் பக்தன்.

g. t. g. - 72

79 ஒழுக்கமே வாழ்க்கையின் நியதி; உயரிய ஒழுக்கம் இல்லையேல் பூரணத்துவம் எய்த முடியாது.

m. g. s. - 15

80 உழைப்பற்ற பிரார்த்தனை, செயலற்ற நம்பிக்கையைப் போன்றது; அது ஒரு மரமாம்பழம்.

m. g. s - 16

81 காமங்கள் அலைமோதிக் கொண்டிருக்கின்ற உள்ளத்தைத் தூய்மைப்படுத்தும் தவறில்லாத ஒரே சிறந்த வழி பிரார்த்தனை.

m. g. s. - 16

82 சத்தியத்தையும் நேர்மையையும் விட மேலானதொரு மதமே கிடையாது. மிகச் சிறந்த ஒழுக்கம் அனைவருக்கும் இன்றியமையாதது.

m. g. s. - 7

83 நாத்திகனின் நாத்திகம் கூடக் கடவுளே.

w. w. g. - 17

84 கடவுளிடம் நேர்மையாக நடந்து கொள்வது ஒன்றே உலகளாவிய கோட்பாடாகும்.

w. w. g. - 26

85 கர்வியின் பிரார்த்தனைக்குக் கடவுள் ஒருபோதும் செவி சாய்ப்பதில்லை. அவரிடம் பேரம் பேசுகிறவர்களின் பிரார்த்தனைகளுக்கும் அவ்வாறே.

w. w. g. - 31

86 நீதி, பகுத்தறிவு, இதயத்தில் ஊடுருவி நிற்கின்ற மதம் இவற்றிற்கு முரணான பழக்கவழக்கங்களை நாம் மகிழ்ச்சியுடன் விலக்கவேண்டும்.

g. g. - 54

87 மனச்சாட்சி என்னும் அமைதியான சிறிய ஒலி செல்லும் தூரத்தை மனிதக்குரல் ஒரு போதும் எட்டிப் பிடிக்க முடியாது.

g. t. g. - 56

88 நான் மதநம்பிக்கை உள்ளவன்; முற்றிலும் கடவுளையே நம்பியிருக்கிறேன். நான் ஒரு அடி முன் வைத்தாலே போதும்; காலம் வரும் போது அடுத்த அடியை அவர் எனக்கு தெளிவாக்குவார்.

h. - 1940

89 புலனடக்கமே சமயங்களின் அடிப்படை.

g. t. g. - 192

90 மனச்சாட்சியின் குரல் கடவுளின் குரல். ஒவ்வொரு செயலும் சிந்தனையும் சரிதானா என்று முடிவாகக் கூறும் நீதிபதி அதுவே.

m g s - 9

91 தோல்வி எனக்கு மனச்சோர்வு தராது; மாறாக அது என்னை மேலும் ஊக்குவிக்கும்.

g. g. - 58

92 உண்மையான கலை அனைத்தும், ஆன்மாவின் இயல்பை வெளிப்படுத்துவனவே. g. t. g. - 25

93 தன்னைப் படைத்தவனுடன் ஒன்றிவிட விரும்புகிறவன், மூன்றும் மனிதனிடம் யோசனை கேட்பதில்லை.

d. b. t. - 57

94 நோன்பு இல்லாமல் பிரார்த்தனை இல்லை என்று நான் உணர்கிறேன் அதைப்போன்றே, பிரார்த்தனை இல்லாத உண்மையான நோன்பு கிடையாது.

m. m. g. - 35

95 ஒருவன் கடவுளிடத்தில் ஜீவநம்பிக்கை வைத்திருந்தால், அதன் மணம் ரோஜாவைப்போல் எங்கும் கமழும்.

g. t. g. - 100

96 எனது தனிப்பட்ட மதம், யாரையும், வெறுப்பதைக் கண்டிப்பாகத் தடுக்கிறது.

g. t. g. - 288

97 உறுதியான அனுபவத்துடன் கூடிய கடவுள் நம்பிக்கை இருந்தால்தான், எண்ணத்தில் தூய்மை ஏற்படும்.

g. t. g. – 275

98 விதியை நம்புவதற்கும் எல்லை உண்டு; எல்லாவிதமான பரிகாரங்களையும் செய்து பார்த்த பிறகே விதிப்படி நடக்கும் என்ற முடிவுக்கு வர வேண்டும்.

m. m. g. - 43

99 இறைவன் பால் நம்பிக்கையிருப்பது உண்மையென்றால் அவரது படைப்பில் மிகவும் கடை நிலையில் உள்ளவற்றின் பால் இரக்கம் கொள்ளாமல் இருக்க முடியாது.

d. b. t. - 100

100 தீங்கு இழைத்தவர்க்கும் நன்மையே செய்வது அழகு; அதுவே எனது குறிக்கோள்.

d. b. t. - 135

101 ஒரு குறிக்கோளின் பெருமை அதன் எல்லையற்ற தன்மையில் தான் இருக்கிறது.

g. t. g. - 142

102 மன்னிக்கும் தன்மையே வீரனின் பண்பு.

g. t. g. - 111

103 மெய்ஞானம், புத்தகங்களின் மூலம் பெறப்படுவதில்லை, அது தனக்குள்ளேயே உணர்ந்து கொள்வதாகும்.

w. w. g. - 21

104 கடவுள் குடி கொண்ட உள்ளம் படைத்தவர்களுக்கு உழைப்பே வழிபாடாகி விடுகிறது.

w. w. g. - 31

105 மனிதன்தான் கடவுளை, அறிவோடும் தெளிவோடும் வழிபட முடியும். தெளிவின்றிக் கடவுளை வழிபடுவதனால், முக்தி கிடைக்காது; முக்தி இல்லையேல் உண்மை இன்பம் இருக்க முடியாது.

106 கடவுள் ஒருவரே என்ற நம்பிக்கை எல்லாச் சமயங்களுக்கும் அடிப்படை.

g. g. - 199

107 சத்தியம் தர்மம் இவற்றை விடமேலான மதம் ஒன்றுமே இல்லை.

d. b t. - 151

108 ஒழுக்கம் இல்லையேல் எந்த ஒரு மதமும் நிலைத்திருக்காது.

m. g. s. - 9

# 3 சமாதானப் பொருளாதாரம்

1 இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களும் வாழ வேண்டுமானால் நாகரிகத்தின் அடிப்படையான சமாதானம் நிலைபெற வேண்டுமானால், கைத் தொழில்களின் மையமாகக் கைராட்டினம் அமைய வேண்டும்.

m. m. g. - 407

2 சகிப்பின்மை, மரியாதையின்மை, முரட்டுத்தனம் ஆகியவை நல்ல சமூகத்தில் நிராகரிக்கப்பட வேண்டும்.

m. m. g. - 342

3 நம் நாட்டின் மிகத்தாழ்ந்த நிலையிலுள்ள மக்களுக்கு விடுதலை அளிப்பதுதான் எனது சுயராஜ்யம்.

m. m. g. - 317

4 மனச்சாட்சிப்படி நடப்பதைப் பெரும்பான்மை என்னும் விதி கட்டுப்படுத்த முடியாது.

g. t. g. - 56

5 சகிக்க முடியாத குற்றத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய, ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமை உண்டு; அது கடமையும் கூட.

m. g. s. - 29

6 சுயராஜ்யம் விழிப்படைந்தவர்களுக்காகத் தான். தூங்கிக் கொண்டிருப்பவர்களுக்கும், அறிவிலிகளுக்கும் அல்ல.

p. p. - 236

7 தீண்டாமை என்னும் சாபக் கேட்டிற்கு நான் கனவு காணும் இந்தியாவில் இடமில்லை.

p. p. - 274

8 கள்ளுக் கடைகள் சகிக்க முடியாத சாபக்கேடு.

g. t. - 102

9 பகுத்தறிவிற்கும் இரக்கத்திற்கும் பரிவிற்கும் அன்பிற்கும் தீண்டாமை முரணானது.

g. t. - 100

10 பணிவு அடக்கம் அன்பு ஆகியவைகளுக்குப் பொருத்தமான ஒரே கொள்கை சுதேசிதான்.

m. m. g. - 412

11 எல்லாவற்றிற்கும் மேலாகக் கவனிக்கப் படவேண்டியவன் மனிதன். இயந்திரத்தைப் புகுத்துவதன் மூலம், மனிதனின் உறுப்புகள் பயனற்றதாகி விடக்கூடாது.

y. i. - 1924

12 இராம ராஜ்யம் என்பது தூய ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைகின்ற மக்களாட்சி.

m. m. g. - 328

13 அளவற்ற தியாகம் புரியும் ஒரு நாடு, எல்லையற்று உயரமுடியும். தியாகத்தின் புனிதத்தன்மைக்கு ஏற்ப முன்னேற்றத்தின் வேகம் அமையும்.

m. g. s. - 17

14 பொதுமக்களின் கருத்து திரளு முன் செய்யப் படும் சட்டம் பயனற்றது.

m. m. g. - 346

15 சுயராஜ்யம் கீழிருந்தே வரவேண்டும். அப்படியானல் ஒவ்வொரு கிராமமும் முழு அதிகாரங்களைப் படைத்த குடியரசாகவோ பஞ்சாயத்தாகவோ இருக்கும்.

g. t. g. - 150

16 சரியான பொருளாதாரம் சமூக நீதியை அடிப்படையாகக் கொண்டது; அது அனைவரின் நலனையும் உயர்த்துகிறது.

g. g. - 70

17 சிறப்பான நல்லொழுக்கத்தை வளர்க்க இயலாத இலக்கியக் கல்வியால் பயனில்லை.

g. t. g. - 80

18 ஒருதுளி விஷம் பால்முழுமையும் நஞ்சாக்குவதைப் போல், தீண்டாமை என்ற விஷம் இந்து மதத்தையே நச்சுத்தன்மையதாக்குகிறது.

y. l. - 1927

19 நீண்ட காலப் பழக்கமான சமூகக் கொடுமையை ஒரே நாளில் ஒளித்து விட முடியாது. அதற்குப் பொறுமையும் விடாமுயற்சியும் எப்பொழுதும் தேவை.

w. w. g. - 79

20 அஹிம்சையின் அடிப்படையிலான சமுதாயக் கட்டுக் கோப்பிற்கு குவியல் முறை முரணனதாகும்.

m. m. g. - 137

21 அரசியல் தலையிடாத வாழ்க்கைப் பகுதி எதுவும் ஜனநாயகத்தில் இருக்காது.

m. m. g. - 344

22 நீதியும், நேர்மையாகக் கருதப்பட வேண்டு மானுல் உதார குணம் படைத்ததாக இருக்க வேண்டும்; அந்த உதார குணமும் நேர்மை யுடன் அமைந்ததாக இருக்க வேண்டும்.

g. t. g. - 107

23 சத்தியமும் அஹிம்சையும் சோஷலிஸ தத்துவமாக உருவாக வேண்டும்.

d. b. t. - 67

24 வர்க்க பேதமற்ற சமுதாயம் ஒரு குறிக்கோள், அதைப் பற்றிச் சிந்திப்பதுடன் நின்று விடாமல் அதை அடைவதற்காக உழைத்தாக வேண்டும்.

g. t. g. - 94

25 தண்டனை தூய்மைப்படுத்தாது; மாருக குழந்தைகளின் உள்ளத்தை அது மேலும் கடின மாக்கும்.

w. w. g. – 147

26 பொருளாதார சமத்துவம் அஹிம்சை அடிப் படையிலான சுதந்தரத்திற்குத் திறவுகோல்.

m. m g. - 257

27 ஒரு தனி மனிதன் அல்லது ஒரு நாட்டின் நேர்மையான நல்வாழ்வைக் கெடுக்கும் பொரு ளாதாரம் தவருனது; எனவே அது பாவம்.

y. i. - 1921

28 ஒழுக்கத்தின் உயர்வைப் புறக்கணிக்கும் பொருளாதாரம் சரியான பொருளாதாரமாகாது.

m. m. g. - 267

29 "தேவைக்கேற்ற ஊதியம்" என்பதே பொருளாதார சமத்துவத்தின் சரியான பொருளாகும்.

m. m. g. - 267

30 குழந்தையினிடமும், மனிதனிடமும் உடல், உள்ளம், உயிர் ஆகியவற்றின் எல்லாச் சிறப்புக்களையும் வெளிக் கொணருவது தான் கல்வி என நான் கொள்கிறேன். m. g. s. - 11

31 பெரும்பான்மையோருக்கும் பெருவாரியான நன்மையளிப்பதல்ல கைராட்டையின் நோக்கம். அனைவருக்கும் அதிக அளவு நன்மையளிப்பதே அதன் குறிக்கோள். w. w. g. - 169

32 உன்னிடம் உள்ள சிறந்த பண்புகளை ஆய்ந்தறிவதில் தான் உண்மையான கல்வி இருக்கிறது மனித குலம் என்ற புத்தகத்தை விட வேறு சிறந்த புத்தகம் என்ன இருக்கிறது.

g. t. g. - 86

33 சீர்திருத்தம் அவசரமாகச் செய்யக் கூடியதல்ல. அதை அஹிம்சா முறையில் கொண்டு வருவதானல், உள்ளவர்கள் இல்லாதவர்கள் ஆகிய இரு சாராருக்கும் எடுத்துச் சொல்வதின் மூலமே அது சாத்தியமாகும். w. w. g. - 80

34 தொலை தூரத்தை நாடிச் செல்லாமல் நம்மைச் சுற்றி நமக்கு அருகாமையில் இருப்பவற்றைப் பயன்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் தான் சுதேசி. m. m. g. - 410

35 போதைப் பொருள்களும், குடியும் பிசாசின் இரு கரங்கள். அவைகளால் தனது அடிமைகளுக்கு போதையை உண்டுபண்ணி அறிவைக் கெடுத்து ஆதரவற்றவர்களாக்கி விடுகிறுன்.

g. t. g - 79

36 திட்டமிடப்பட்ட வேலையைச் செய்து முடிக்கத் தேவையான மனித உழைப்பு கிடைக்க முடியாத நிலைமையில் இயந்திரத்தைப் பயன்படுத்தலாம்.

m. m. g. - 236

37 நான் கனவு காண்கிற இராம ராஜ்யம் அரசனுக்கும் ஆண்டிக்கும் சம உரிமைகளை உத்தரவாதம் செய்கிறது.

m. m. g. - 326

38 நற்கல்வியை நிலைநாட்ட, ஒருவனின் வாழ்க்கை மாசற்றதாக இருக்கவேண்டுமென்பது இன்றியமையாதது.

g. t g. - 222

39 மக்களின் வாழ்வை மக்கட் பிரதிநிதிகளின் மூலம் ஒழுங்குபடுத்துவதற்கான ஆற்றலே அரசியல் அதிகாரம் எனப்படும்.

g. t. g. - 202

40 தற்கால வழக்கில் இருக்கின்ற ஜாதியில் எனக்கு நம்பிக்கை இல்லை. அது ஒரு புண்; முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது.

w, w. g. - 176

41 ஒரு தனி மனிதன், அவன் எவ்வளவு பெரியவனுயினும் அவன் கட்டளைப்படி, மக்களுக்காக மக்களாலான மக்களாட்சி நடைபெற முடியாது.

m. m. g. - 346

42 மனமாற்றம் செய்வது நமது வழிமுறை; பலவந்தம் அல்ல; ஏனென்றால் பலாத்காரத்தின் விளைவுதான் பலவந்தம்.

p. p. - 36

43 ஒழுக்கத்தின் தூய தன்மையும், விமோசனமும் இதயத் தூய்மையைப் பொருத்ததாகும்.

g t. g. - 43

44 பொது மக்களின் கருத்து மட்டுமே சமுதாயத்தை நல்லதாகவும், நலமாகவும் வைத்திருக்க முடியும்.

m. m. g. - 343

45 நலம் பயக்கத்தக்க விதத்தில் குற்றமில்லாமல் நிதானத்துடன் இடித்துரைப்பது பொது வாழ்வுக்குப் பிராணவாயு போன்றது.

m. m. g. - 343

46 ஜாதிக்கும் மதத்திற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது; ஜாதிக் கொடுமை ஆன்மீக வளர்ச்சிக்கும் தேசியத்திற்கும் தீங்கு பயப்பதாகும்.

w. w. g. - 137

47 இந்திய மக்களின் ஒற்றுமை, பொருளாதார விடுதலை, சமத்துவப் பொருளாதாரம் ஆகியவற்றைக் குறிக்கும் சின்னம் - கதர்.

m. m. g. - 406

48 நூல் நூற்பது உலகிலுள்ள நாடுகளுக்கிடையே தவறான எண்ணத்தைப் பரப்பாது; மாறாக நல்லெண்ணத்தையும் தன்னம்பிக்கையையும் உண்டாக்கும்.

m. m. g. - 407

49 ராட்டையின் ஒவ்வொரு சுழற்சியும் சமாதானத் தையும், நல்லெண்ணத்தையும், அன்பையும் கூடவே நூற்கிறது.

m. m. g. - 407

50 சுதேசி என்ற வார்த்தைக்கு நான் தரும் பொருள் அண்டை வீட்டாரைப் புறக்கணித்து தூரத்தில் இருப்பவருக்குச் சேவை செய்வதல்ல.

m. m. g. - 413

51 வகுப்பு வாதப் பகைமை நினைக்க முடியாத படு மோசமான பெருவியாதி.

d. b. t. - 140

52 சுதேசிக் கொள்கை பகைமையின் விளைவல்ல; தன்னலமற்ற சேவையாகும். உன்னதமான அஹிம்சை அதாவது தூய அன்பு தான் அதன் ஆணிவேர்.

m. m. g. - 415

53 அஹிம்சையின் முழுமையான அடிப்படையின்றி சிறந்த முறையில் மக்களாட்சி அமைய முடியாது.

m. m. g. - 348

54 கிராமங்களில் புராதன கலாசாரம் பல வகைகளில் மூடி மறைக்கப்பட்டிருக்கின்றது. அதை அகற்று; அவர்களின் நீடித்த ஏழ்மை யையும் அறியாமையையும் நீக்கிப்பார்; ஒப்பற்ற சுதந்தரமான சீர்மிகு குடிமகனைக் காண்பாய்.

m. m. g. - 362

55 தூய எண்ணங்களின் அடிப்படையில் ஏற்பட்ட, தூய செயலாற்றும் தலை சிறந்த நாடாக இந்தியா விளங்க வேண்டுமானால் 'பெரிய மனிதர்கள்' எனப்படுபவர்களின் அறிவு மழுங்கி கிராமங்கள் தங்கள் கருத்தை அவர்கள் விரும்பும் வண்ணம் வெளியிடும் சக்தியைக் கடவுள் அருளுவாராக.

m. m. g. – 363

56 நகரங்கள் கிராமிய வாழ்க்கையை மேற்கொண்டு கிராம வாசிகளுக்காக வாழவும் வேண்டும். m. m. g - 363

57 சுதந்திரத்தோடு இணைந்தது கட்டுப்பாடும் பணிவும். y. i. - 1926

58 சோஷலிசம் என்பது 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' காண்பதாகும். m. m. g. - 246

59 நான் கனவு காணும் இந்தியாவில் தீண்டாமை என்னும் சாபக்கேட்டுக்கு இடமேயிருக்காது.

p. p. - 274

60 சத்தியம், அஹிம்சை இவற்றால் இந்தியா தனது குறிக்கோளை அடைந்தால் அதுவே உலகத்திற்குச் செய்யும் பேருபகாரம் என்று மிகப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். y. i. - 1931

61 தேசியம் தவறானதல்ல; தேசங்களின் இன்றைய குறுகிய மனப்பான்மையும் சுயநலமும் தனித்து நிற்கும் இயல்புதான் கேடு. y. i. - 1925

62 மற்ருெரு நாட்டைச் சுரண்டுவதை அனுமதிக்கும் பொருளாதார முறை ஒழுக்கந் தவறியது.
m. m. g. - 263

63 அரசியல் அதிகாரம் முடிவானதல்ல; வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் மக்கள் தங்கள் நிலை மையை மேம்படுத்திக் கொள்ள உதவும் வழி களில் ஒன்ருகும். m. m. g. - 344

64 மக்களாட்சியைபற்றி என் கருத்து என்ன வென்ருல், வலியவர்களைப் போன்று எளியவர் களுக்கும் சம சந்தர்ப்பம் இருக்க வேண்டும் என்பதே. w. w. g. - 124

65 மக்களுக்குச் சிறிதளவும் தொல்லை கொடுக்காத அதிகாரம்தான் மிகச் சிறந்ததாகும்.
m. m. g. - 133

66 மக்களாட்சி நன்கு செயல்படுவதற்கு அஹிம்சா பூர்வமான ஒத்துழையாமை ஒரு உதாரணமாக இருக்கும். g. t. g. - 68

67 ஒரு சமுதாயத்தில் சிறுபான்மையாரை நடத்து கின்றதன்மையில்தான் அதன் நாகரிகச்சிறப்பைத் தெரிந்து கொள்ளலாம். w. w. g - 127

68 ஒரு கிராம அமைப்பின் வெற்றி அதன் சட்டத் தைப் பொருத்ததல்ல; அதைச் செயலாற்றும் நல்ல மனிதரைப் பொருத்ததாகும். m. g. s. - 28

69 அதிக அளவு கட்டுப்பாடும் தன்னடக்கமும் தன்னிடத்தே கொண்டுள்ள சுதந்திர அமைப்புத் தான் மகோன்னதமானது. m. g. s. - 15

70 தனி மனிதனின் சுதந்திரத்திற்குக் கை கொடுக்காமல் எந்த சமுதாயத்தையும் அமைக்க முடியாது.
g. t. g. - 151

71 தீண்டாமையை ஒழிப்பது அஹிம்சையின் உயர்வு.
m. g. s - 24

72 மது விலக்கு என்பது ஏதோ போதைக் கடைகளை மூடுவது மட்டுமல்ல, நாட்டின் ஒருவித முதியோர் கல்வியும் ஆகும். w. w. g. - 137

73 ஒரு நாட்டிலுள்ள கோடீஸ்வரர்களின் எண்ணிக்கையால் அல்ல; அந்த நாட்டு மக்களனைவரின் பசியைத் துடைப்பதில் தான் நாட்டின் மேன்மை சோதிக்கப்பட வேண்டும். w. w. g. - 127

74 கட்டுப்பாடு மிகுதியினால் மக்களாட்சி பாழாகி விடும். மக்களிடையே நிலவும் நம்பிக்கையைப் பொறுத்ததே குடியாட்சி. w. w. g. - 124

75 எல்லோரும் தலைவர்களாக முடியாது. ஆனால் எல்லோரும் தொண்டர்களாகலாம். g' t. g. - 166

76 இயந்திரத்திற்கும் இடம் உண்டு; அது சமுதாயத்தில் இடம் பெற்று விட்டது. ஆனால் அவசியமான மனித உழைப்பை அகற்றிவிட்டு இயந்திரம் நுழைய அனுமதிக்கக்கூடாது. w. w. g. - 133

77 ஊக்கம், சகிப்புத் தன்மை, அச்சமின்மை எல்லாவற்றிற்கும் மேல் தன்னலத் தியாகம் ஆகிய குணங்கள் நம் தலைவர்களுக்குத் தேவை.
g. t. g. - 166

78 அவர்களை விட ஏழ்மையிலிருப்பவர்களுக்கு நன்மை செய்யும் பொருட்டு ஏழைகளிடமே யாசித்துப் பணம் பெறுவதில் எனக்கு வெட்கம் கிடையாது. w. w. g. - 85

79 குடிப்பது கெட்ட பழக்கம் என்பதைவிட அது ஒரு வியாதியே. w. w. g. - 137

80 கடவுளிடத்திலிருந்து நம்மைத் திருப்புகின்ற எண்ணங்கள் அல்லது கடவுளினிடத்தில் நம்மை இட்டுச் செல்லாத எண்ணங்கள் நமது முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டைகள்.

g. t. g. - 119

81 அரசியல் வாழ்வு நமது சொந்த வாழ்வின் எதிரொலியாக இருக்க வேண்டும்; இரண்டிற்கும் வேறுபாடு கூடாது. g. t. g. - 203

82 சமுதாயம் முழுவதின் நன்மைக்காக உள்ள கட்டுப்பாடுகளுக்கு ஒருவன் விரும்பிக் கீழ்ப்படிய வேண்டும்; அது அவனையும் அவன் உறுப்பினனாக இருக்கும் சமுதாயத்தையும் வளப் படுத்தும். w. w. g - 79

# வாழ்க்கை நியதிகள்

1 பணம் திரட்டுவதில் உனது ஆற்றலைச் செலவு செய்யாமல் உனது நாட்டிற்காகச் சேவை செய். w. w. g. - 79

2 சேவா வாழ்க்கைக்குப் பணிவு வேண்டும்; பிறருக்காக வாழ்க்கையை அர்ப்பணிப்பவன் தனக்கென நேரம் ஒதுக்க முடியாது. w. w. g. - 50

3 தான் மெய் வருந்துவதே சேவையின் உண்மைக்கு அடையாளம். d b. t. - 26

4 பெண்களுக்குரிய உண்மையான ஆபரணம் அவளுடைய குணமும் தூய ஒழுக்கமும்தான். g. t. g. - 158

5 திமை தானகவே இயங்க முடியாது. d. b. t. - 68

6 பனையளவு உபதேசத்தை விட தினையளவு நடைமுறையே மேலானது. g. t. g. - 205

7 காரிருளையும் ஒரு சிறு விளக்கு அகற்றிவிடும். d. b. t. - 72

8 மழை காலத்தை வசந்தம் தொடர்வது போல் மனிதன் தன் கடமைகளைச் செய்தால் உரிமைகள் தாமே அவனை வந்தடையும். p. p. - 285

9 ஒருவன் சரியென்று நினைப்பதை அச்சமின்றி தொடங்குவது சிறந்தவிதி. m. m. g. - 60

10 ஏராளமாகப் பிரசாரம் செய்வதின் காரணமா கவே தவறு உண்மையாகிவிடாது. g. t. g. - 96

11 கோழைத்தனம் பலாத்காரம் ஆகிய இவ்விரண் டில் எதையாவது தெரிந்தெடுக்க வேண்டும் என்ருல் பலாத்காரத்தைக் கையாளலாமென்று கூறுவேன். g. t. g. - —

12 கோழைத்தனம் ஒரு போதும் ஒழுக்கமாகாது. m. m. g. - 59

13 இல்லறமென்பது இருவருக்கும் இம்மையிலும், மறுமையிலும் நன்மை பயப்பது. m. g. s. - 280

14 நிதானமும் பதற்றம் இல்லாத அமைதியுமே அறிவுடைமையாகும். g. t. g. - 300

15 ஒருவனுக்கு சேவையில் மகிழ்ச்சி இருந் தால் தான் சேவை என்ற வார்த்தை பொருட் செறிவுள்ளதாகும். ஆடம்பரத்திற் காகவோ, பொது மக்களின் அபிப்பிராயத்திற் குப் பயந்தோ செய்ததானுல், அது அவனது வளர்ச்சியைத் தடுப்பதுடன் அவனது ஆர்வத் தையும் நசுக்கிவிடும். w. w. g. - 80

16 வேகத்தால் சாதிப்பதொன்றுமில்லை; தனது கடமையை நிதானமாகச் செய்வதால் மனிதன் அதிகமாகத் தெரிந்து கொள்கிருன். நல்லவித மாவும் வாழ்கிருன். g. t. g. - 264

17 முழுமையாகக் கட்டுப் படுத்தப்பட்ட எண்ணம் மிக வீரிய தன்மை கொண்டது; தானுகவே செயலாற்றும் திறனும் கொண்டது. m. g. s. - 16

18 என்னைப் போல் தவறு செய்பவர்களை வைத்து சத்தியத்தின் உயர்வை ஒரு மயிரிழையேனும் குறைத்து விட வேண்டாம். w. w. g. - 197

19 என் எழுத்துக்கள் என் உடலுடன் எரித்துச் சாம்பலாக்கப்பட வேண்டும், நிலைத்து நிற்பது என் செயல் மட்டுமே; பேச்சும் எழுத்தும் அல்ல. w. w. g. - 198

20 தேவை இல்லாத குழந்தைகளைப் பெறுவது பாவம். ஒருவனின் செயலால் ஏற்படுகின்ற விளைவுகளைத் தடுப்பது அதைவிட அதிகப்பாவம். m. m. g - 287

21 மனக்கசப்போ, பகைமையோ, ஆத்திரமோ சிறிதுமின்றி உள்ளத்தின் ஆழத்திலிருந்து பிறக்கும் அறைகூவலால் மேற்கொள்ளப்படு மானால் சட்ட மறுப்பு நற்பண்பாகிவிடும். m. g. s. - 18

22 ஜனப் பெருக்கம் தடுக்கப்படவேண்டிய பெரும் கேடல்ல. ஆனால் செயற்கை முறைகளால் கட்டுப் படுத்துவதுதான் மிகப் பெருங்கேடு. m. g. s. - 285

23 தனது தேவைக்கு அதிகமான பணம் வைத்துக் கொள்ளக் கூடாது என்ற கொள் கையை வெகுகாலத்திற்கு முன்பே கற்றுக் கொண்டு விட்டேன். w. w. g. - 74

24 தனது ஒழுக்க வளர்ச்சியைத் தடுக்குமேயானால் விலை மதிப்புள்ள வெகுமதிகளேயானாலும் தயங்காமலும் பயன் கருதாமலும் அழித்து விட வேண்டும். w. w. g. - 75

25 உனக்கு நீயே நீதிபதியாக இரு; உண்மையில் நீ மகிழ்ச்சியாக இருப்பாய். d. b. t. - 10

26 பொருத்தம் அற்ற பேச்சு உண்மையானதல்ல, அதைப் பேசாதே. m. m. g. - 47

27 பசித்துப்புசி; உன் உணவுக்காக நீயே உழைக்க வேண்டும். g. g. - 70

28 கடமையைச் சுட்டிக் காட்டும் செய்முறை தான் நாகரிகம். w. w. g. - 47

29 ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே நெருங்கிய நட்பும் தோழமை உணர்வும் ஏற்படுத்துவது தான் திருமணத்தின் உண்மையான நோக்க மாக இருக்கவேண்டும். m. m. g. - 279

30 பெண் காம இச்சைக்காக ஏற்பட்டவள் என் பதை அவள் மறந்துவிடவேண்டும். அவள் தாயாகவும், அவனை உருவாக்கும் மௌனத் தலைவியாகவும் பெருமிதத்துடன் அவனோடு உறவாட முடியும். m. m. g. - 294

31 மனிதன் தனது காம இச்சைக்காகப் பெண் இனத்தை அளவுக்கு மீறி இழிவு படுத்திவிட் டான். செயற்கைக் கருத்தடைக் கருவிகள் மேலும் அவளை இழிவுபடுத்துவதாகும். m.. m. g. - 286

32 நியாயம் விரும்புகிறவர்கள் பிறருக்கு நியாயம் வழங்கவேண்டும். w. w g. - 71

33 சத்திய வழியைக் கண்டுபிடிக்கும் முயற்சி யில் நாம் மரணத்தின் மத்தியில் வாழ்கிறோம்.

y. i. - 1927

34 செயற்கை முறையால் குழந்தைப் பேற்றைத் தடுக்கலாம். ஆனால் ஆண் பெண் இருசாராரின் ஜிவசக்தியையும் அது பாழாக்கிவிடும்.

m. m g. - 287

35 கடமை ஆற்றுங்கால் பொது மக்களின் கருத்துக் களுக்கு ஒருவன் ஆளாகக் கூடாது. d. b. t. - 19

36 நாம் முன்னேற வேண்டுமானல் பழைமையை நினைத்துக்கொண்டிராமல் புதுமையைக் கையாள வேண்டும். w. w. g. - 164

37 நாகரிகம் என்பது தேவையைப் பெருக்கிக் கொள்வதல்ல, தானகவே விரும்பி வலியக் குறைத்துக் கொள்வதுதான். m. m. g. - 189

38 எல்லாக் காலத்திலும் எல்லாச் சூழ்நிலைகளிலும் இந்து - முஸ்லிம் ஒற்றுமையே நமது கொள்கை யாக இருக்க வேண்டும். g. g. - 100

39 மனித வளர்ச்சிக்கு வாழ்வைப் போல் சாவும் அவசியம். w. w. g. - 37

40 நீ உன்னையே அலங்கரித்துக் கொள்ளாதே, வாசனைகளைத் தேடித்திரியாதே, மணம் கமழ வேண்டுமென்று நீ விரும்பினல் அது உன் இதயத்திலிருந்து மலரவேண்டும் அப்பொழுது நீ ஒரு தனி மனிதனை மட்டுமல்ல மனித சமுதாயத் தையே கவர்ச்சி செய்துவிடுவாய். m. m. g. - 292

41 தந்திரம் ஒழுக்கக் குறைவாகும்; அதனல் அரசியலில் சாதிப்பது ஒன்றுமில்லை. m. g. s. - 10

42 தவறுவது மனித சுபாவம், ஒருவன் தனது தவற்றை ஒப்புக்கொண்டு, அதை மீண்டும் செய்யா திருப்பது மனிதத் தன்மையாகும்.
m g. s. - 10

43 எங்கெங்கே அன்பு உண்டோ அங்கே வாழ்வு உண்டு. பகைமை, அழிவுக்கு இட்டுச் செல்லும்.
d. b. t. - 8

44 அமைதியாம் அமுதத்திற்காகத் தவிக்கும், சண்டைகள் மலிந்த உலகுக்கு அமைதிக் கலையைக் கற்பிக்கக் கூடியவர்கள் பெண்களே.
w. w. g. - 140

45 நம்மை அறிமுகப்படுத்துவது நம் வார்த்தைகளல்ல; நமது வாழ்க்கையே. d b. t. - 155

46 ஒருவனுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு மட்டும் அவன் வைத்துக்கொண்டால் உலகம் முழுதும் திருப்தியுடன் வாழும். y. i. - 1930

47 ஒவ்வொரு வீடும் ஒரு பல்கலைக் கழகம்; பெற்றோர்கள் அதன் ஆசிரியர்கள். w. w. g. - 144

48 அடிப்படையில் ஆணும் பெண்ணும் சமம். இருவரின் பிரச்னையும் உண்மையில் ஒன்றே. இருவரும் ஒருவருக்கொருவர் இன்றியமையாதவர்கள். m. m. g. - 294

49 வேண்டுமென்றே வலியப் போய் நன்மை செய்வதுதான் சால்புடைமையாகும். g. t. - 78

50 மகத்தான தியாகங்கள் இல்லாமல் விடுதலைப் போராட்டங்கள் நடைபெறுவதில்லை. g. g. - 88

51 அன்பு அளிக்கும் தீர்ப்பு சரணுகதி; சட்டம் அளிக்கும் தீர்ப்பு தண்டனே. d. b. t. - 36

52 பரஸ்பரம் சகிப்புத்தன்மை ஒழுக்க விதியில் மிகச் சிறந்ததாகும். y. i. - 1926

53 அனுசரித்துப் போவதென்பது அப்படியே பின் பற்றுவதாகாது. நிராகரிக்கும் ஒழுங்கும் தன்வயப் படுத்தும் சக்தியும் சேர்ந்ததே அது.
g. t. g. - 19

54 தன்னடக்கமும் நல்லொழுக்கமும் தான் மனிதனே மிருக இனத்திலிருந்து பிரித்துக் காட்டும்.
m. g. s. - 15

55 தானே அறிவில் சிறந்தவன் என்ற ஆணவம் கொண்டுள்ள ஆணின் அறிவை விட, பெண்ணின் உள்ளுணர்வே உண்மையானது என்று பலகாலும் நிரூபிக்கப் பட்டிருக்கிறது.
w. w. g. - 138

56 தூய்மையான தியாகத்திற்கு ஏற்றவாறு வேக மான முன்னேற்றம் இருக்கும்: g. t. g. - 197

57 தானுகவே தன்னேக் கட்டுப்படுத்திக் கொள்வது பலவந்தமாகாது. m. g. s. - 15

58 ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் புறக்கணிப்பது தற்கொலேயாகும். m. g. s. - 15

59 சீர்திருத்தம் அவசரமாகச் செய்யக் கூடாது; அதை அஹிம்சையின் அடிப்படையில் செய்வதானுல்

உள்ளவர்களுக்கும் இல்லாதவர்களுக்கும் பயிற்சி அளிக்கவேண்டும். w. w. g. - 80

60 பெரும் பான்மையினருக்கு எதிராக சிறுபான்மை யோர் தொடங்கும் எதிர்ப்பிலிருந்துதான் சீர் திருத்தம் ஏற்படுகிறது. w. w. g. - 89

61 பொதுவான லட்சியத்திலும் பொதுவான முயற்சி யிலும் பொதுவான சுக துக்கங்களினுலுமே ஒற்றுமை ஏற்படும். m. g. s. - 25

62 தனிப்பட்ட ஒரு சிறு கூட்டத்தினுல்தான் அரிய பெரிய சாதனைகள் செய்யப்பட்டன. w. w. g. - 54

63 உள்ளம் தூய்மையற்று இருக்கும் போதும், உனது இச்சைகளைக் கட்டுப்படுத்த முடியாத போதும் நீ கல்வி கற்றவனுயிருப்பதில்லை. w. w. g. - 66

64 துன்ப வேளை தான் நட்பினைச் சோதிக்கின்ற காலம். w. w. g. – 521

65 உலகில் தற்பெருமை, சினம், அச்சம், பொருமை ஆகிய அனைத்துக்கும் தன்னடக்கமின்மையே அடிப்படைக் காரணமாகும். w. w. g. - 66

66 உன் சக்திக்கு மேற்பட்ட செயலில் ஈடுபடாதே; அதுவும் சத்தியத்திலிருந்து தவறுவதாகும். w. w. g. - 58

67 ஒரு குறிக்கோளின் சிறப்பு அதன் பரந்த தன்மை யில் அடங்கியிருக்கிறது. g. t. g. - 142

68 சீர்திருத்தக்காரனின் பாதை ரோஜா மலர்களால் தூவப்பட்டதல்ல; முட்கள் செறிந்ததே. அவன்

கவனமாக தத்தித் தத்தி நடை போட வேண்டுமே அல்லாமல் தாவிப் போக முடியாது.
w. w. g. - 81

69 ஒன்றிலிருந்து மற்றொரு பகுதிக்கு மாறிக் கொள்ளக் கூடிய மாதிரி மனித சமுதாயம் பல் வேறு கூறுகளாகப் பகுக்கப்பட்டிருக்கவில்லை.
g. t. g. - 136

70 கோடிக்கணக்கானவர்கள் பெற இயலாததை நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது. m. m. g. - 191

71 கடுமையாகத் தோன்றினும் அவசியம் ஏற்படும் பொழுது உண்மையைச் சொல்லித்தான் ஆக வேண்டும்.
g. g. - 234

72 வாயைத் தைத்துக் கொள்வது மௌனமல்ல. நாக்கைத் துண்டித்துக் கொள்வதனாலும் பேசா மலிருக்கலாம்: ஆனால் அதுவும் மௌனமாகாது. பேசும் திறனிருந்தும் பயனிலாச் சொல் எதுவும் பேசாதிருத்தலே மௌனமாகும். m. m. g. - 32

73 பெற்றோர் தனது குழந்தைகள் எல்லோருக் கும், சமமாகக் கொடுக்கக் கூடியது அவன் அல்லது அவளுடைய ஒழுக்கமும் கல்வி வசதியுமே.
m. m. g. - 281

74 புலமை தானாக ஒருவனின் ஒழுக்கத்தை ஒரு சிறிதும் உயர்த்தி விடாது. பண்பைப் பெறு வதற்கும் புலமைக்கும் தொடர்பே கிடையாது.
s. b. - 255

75 சத்தியம் மட்டுமே நிலைபெற்றிருக்கும்; மற்றவை கால வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படும்.
m. m. g. - 47

76 ஒருவனின் சீர்திருத்த ஆர்வம் எல்லையைக் கடந்து செல்லும்படி அவனைச் செய்யவிடக் கூடாது. w. w. g. - 81

77 புலனடக்கம் மனிதனின் வாழ்க்கை விதி. மிகச் சிறந்த புலனடக்கம் இல்லாமல் முழுமையை அடைய முடியாது. w. w. g. - 57

78 ஒவ்வொரு நல்ல இயக்கமும் ஐந்து நிலைகளைக் கடந்து செல்லுகின்றன. உதாசீனம், ஏளனம், வசை, அடக்குமுறை, மதிப்பு ஆகியனவே அந் நிலைகளாகும். w. w. g. - 84

81 முயற்சியில் தான் திருப்தி அடங்கி இருக்கிறதே தவிர அதன் முடிவில் அல்ல. g. t. g. – 19

82 பாவத்தைப் போல் குற்றமும் இரகசிய மறைவில் தான் வளர்கிறது. சூரிய வெளிச்சத்தில் அது மாண்டுவிடுகிறது. g. t. g. – 290

83 ஆண் பெண் சேர்க்கைக்கான தூண்டுதல் நல்லதே; ஆனால் அது படைப்புக்காகமட்டும்தான். வேறு எந்தவிதமான நோக்கத்திற்காக அது பயன் படுத்தப் பட்டாலும் கடவுளுக்கும், மனிதனுக்கும் ஆற்றும் பாவச் செயலாகும். h. 1936

84 மனிதனின் இச்சைப் பொருள் என்று பெண் கருதுவதை விட்டுவிட வேண்டும்; அதைத் தவிர்க்கும் வழி அவனைக் காட்டிலும் அவள் கையில் தான் உள்ளது. m. m. g. - 290

85 இவ்வுலகில் நிரந்தரமான சமாதானம் ஏற்பட வேண்டுமானால் நாம் அதைக் குழந்தைகளிட மிருந்தே தொடங்க வேண்டும். m. m. g. - 282

86 உண்மையான அழகு இதயத்தின் பரிசுத்தத் தன்மையில்தான் அடங்கி இருக்கிறது.
m. g. s - 8

87 நல்லதொரு வீட்டிற்குச் சமமான பள்ளிக் கூடமோ, நாணயமும் நேர்மையுமுள்ள பெற்ருேர் களுக்குச் சமமான ஆசிரியர்களோ இல்லை யென்றே சொல்வேன். w. w. g. - 145

88 சேவை, தியாகம் ஆகியவற்றின் உயிருள்ள உருவமாகப் பெண் இனத்தை வழிபடு கிறேன். d. b. t. - 27

89 சத்தியம் பொய்மையை அழித்து விடுகிறது. அன்பு கோபத்தை அழித்து விடுகிறது. h. - 1942

90 அறிவுள்ள ஒரு தந்தை குழந்தைகள் தவறு செய்வதை அனுமதிப்பான். தம் தவற்றின் விளைவுகளைக் குழந்தைகள் ஒரொரு சமயம் அனுபவிப்பதும் நல்லதே. I. p. - 44

"என்னுடைய நண்பர்கள் என்னை உண்மையாகவே பெருமைப் படுத்த வேண்டுமென்று நினைப் பார்களேயானல், என்னுடைய திட்டங்களைத் தங்களுடைய அன்ருட வாழ்க்கையில் நிறை வேற்றிக் காட்டட்டும்; அவற்றில் நம்பிக்கையில்லையானல் என்னை முழுமூச்சுடன் எதிர்க்கட்டும்."

(Mind of Mahatma Gandhi)

## ஆதார நூல்களும் அவற்றின் அடையாளங்களும்

| | | |
|---|---|---|
| Day Book of Thoughts | : | d. b. t. |
| Gandhian Gems | : | g. g. |
| Glorious Thoughts of Gandhiji | : | g. t. g. |
| Great Thoughts | : | g. t. |
| Harijan | : | h. |
| Lenin and Gandhi | : | l. & g. |
| Last Phase Vol. I | : | l. p. |
| Mahatma Gandhiji's Saying | : | m. g. s. |
| Mind of Mahatma Gandhi | : | m. m. g. |
| Precious Pearls | : | p. p. |
| Speeches & Writings | : | s. & w. |
| Wit and Wisdom of Gandhiji | : | w. w. g. |
| Young India | : | y. i. |

# காந்தி இலக்கிய மன்றம்

காந்தி நூற்றுண்டு விழாப் பரிசாகக் காந்தி இலக்கிய மன்றத் திட்டத்தை அன்பர்கள் முன் சமர்ப்பிக்கின்றோம்.

காந்தியக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட சிறு நூல்கள் பல வெளிவர வேண்டும் என்பது எங்கள் அவா. சமூகம், சமயம், அரசியல், பொருளாதாரம், கலை, இலக்கியம், உலக சமாதானம் முதலான பல்வேறு துறைகளைப் பற்றி மாதம் இரண்டு ஏடுகள் தங்கள் வீடு நோக்கி வரும். ஆண்டு இறுதியில் தங்களிடத்தில் 24 ஏடுகள் சேர்ந் திருக்கும். ஒவ்வொன்றின் விலை 50 காசுகள்; எனினும் ரூ. 10/-க்கே தாங்கள் இவையனைத் தையும் பெற்றுப் பயனடையலாம். தபால் செலவு எங்களுடையது. தாங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இத்திட்டத்தில் சேர இசைவு தெரிவித்து எங்களுக்கு ரூ. 10/- அனுப்ப வேண்டியதே.

இலக்கிய மன்றத் திட்டத்தில் சேர்ந்து ஆதரவு தருவதுடன், முழுப்பயன்பெற வேண்டுகின்றோம்.

செயலாளர்

தமிழ்நாடு காந்தி நினைவு நிதி

காந்தி நிலையம்
மதுரை-13
*தொலைபேசி : 25700*

VAIGAI ACHAGAM, MADURAI-1